## பாண்டிச்சேரி அரசு

### கல்வி இலாகா

## அறிவிப்பு

பாண்டிச்சேரி யூனியன் பிரதேச கல்வி இலாகாவுக்கு ரேடியோ மெக்கானிக் ஆப்பரேட்டர் ஒருவருக்கான வேலைக்கு ஷெட்யூல்ட் ட்ரைப்ஸ் வகுப்பைச் சேர்ந்த பொருத்தமானவர்களிடமிருந்து விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன. இந்தபதவி தற்காலிகமானது ஆனால் தொடரக்கூடும்.

1. யோக்யதாம்சங்கள்:

1. VIIவது ஸ்டாண்டர்டு தேறி இருக்க வேண்டும்.

2. அங்கீகரிக்கப்பட்ட ஒரு நிறுவனத்திடமிருந்து ரேடியோ மெக்கானிக் என்பதற்கான சர்ட்டிபிகேட் வேண்டும். அல்லது பிரபலமான ரேடியோ என்ஜினியரிங் நிறுவனத்திலோ அல்லது ஒர்க்ஷாப்பிலோ 4 ஆண்டு காலம் பணிபுரிந்த அனுபவம் உள்ளவராக இருக்க வேண்டும்.

வயதுவரம்பு:- 18 வயது முதல் 30 ஆண்டு வரை ஷெட்யூல்ட் ட்ரைப்ஸ் இனத்தைச் சேர்ந்தவர்களுக்கு 5ஆண்டுகள் தளர்த்தப்படும்.

3. சம்பளவிகிதம்: ரூ. 210-4-226-EB-4-250-5-290 அத்துடன் விதிமுறைகளில் அனுமதித்துள்ள வழக்கமான அலவன்சுகள்.

2. பிறந்ததேதி, எந்த நாட்டைச் சேர்ந்தவர், தற்போதைய முகவரி, கல்வித்தகுதி, மார்க்குகள், எந்த கிளாசில் தேர்வு பெற்றார், முன் அனுபவம் போன்ற விவரங்கள் சர்ட்டிபிகேட்டுகளின் அட்டெஸ்டட் காப்பிகள் கொண்ட விண்ணப்பங்கள் ''கல்வி இயக்குனர், 9, ரோமெய்ன் ரோலண்டு வீதி, பாண்டிச்சேரி-605001'' அவர்களுக்கு அனுப்பவேண்டும். இந்திய குடிமக்கள் அனுப்பும் விண்ணப்பங்கள் 1978 செப்டம்பர் 12ந்தேதி அன்றோ அல்லது அதற்கு முன்னதாகவோ வந்து சேர வேண்டும்.

3. ஷெட்யூல்ட் ட்ரைப்ஸ் பிரிவைச் சேர்ந்தவர்கள் மட்டுமே விண்ணப்பிக்கவேண்டும்.

4. நேர்முகப் பேட்டிக்கு அழைக்கப்படும் ஷெட்யூல்ட் ட்ரைப்ஸ் விண்ணப்பதாரர்களுக்கு சமீபத்திய வழிப்பாதைக்கான பயணப்படி (வரவும் போகவும்) வழங்கப்படும். நேர்முகப்பேட்டியின் போது டிக்கெட்டுகளை அல்லது ரசீதுகளை அவர்கள் தாக்கல் செய்ய வேண்டும். வேலை பார்த்துக் கொண்டிருக்கும் விண்ணப்பதாரர்கள், தங்கள் விண்ணப்பங்களை முறைப்படி உரியவழியில், அனுப்பி இந்த அலுவலுலகத்துக்கு மேலே குறிப்பிட்டுள்ள கடைசிதேதி அன்றோ அல்லதுஅதற்கு முன்னதாகவோ வந்து சேருமாறு செய்ய வேண்டும். அல்லது அவ்வாறு தற்போது வேலை பார்த்துக்கொண்டிருப்பவர்கள், நேர்முகப்பேட்டிக்கு வரும்போது, தங்கள் முதலாளியிடம் அல்லது மேலதிகாரியிடமிருந்து ''ஆட்சேபணை இல்லை'' (நோ அப்ஜக்ஷன்) சர்ட்டிபிகேட் வாங்கிவந்து கொடுக்க வேண்டும். தாமதமாகவும், முற்றிலும் பூர்த்தி செய்யாமலும் வரும் விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படும். தேர்வு செய்யப்படும். விண்ணப்பதாரர்கள் உடனடியாக வேலையில் சேரத் தயாராக இருக்கவேண்டும்.

கல்வி இயக்குனர்

## குடிசை மாற்று வாரியம்

## குறுகிய கால ஒப்பந்தம்

Lr. No: 5454-SE(S) D1-78

கீழ்க்கண்ட வேலைகளுக்காக அந்தந்த தேதிகளில் குறிப்பிட்ட வேலைகளுக்கான சீல்ட் டெண்டர்கள் மாலை 3 மணி வரை வரவேற்கப்படுகிறது.

| வரிசை எண் | வேலையின் பெயர் | உத்தேச மதிப்பீடு | டேவணி தொகை | டெண்டர் ஷெட்யூல்கள் விற்பனை காலம் | டெண்டர்கள் இறக்கப்படும் தேதிகள் |
|---|---|---|---|---|---|
| 1. | கு.மா. வா.-ஹட்கோவின் நான்கு மாடி குடியிருப்பு கட்டிடங்கள் கட்டுதல். T.D.3-78திட்டங்கள் வருமாறு: | | | | |
| I | KK நகர் Phase II மாநகராட்சி 115-வது வட்டம் 32 குடியிருப்புகள் | | | | |
| (a) | பாட்ச் I 2 பிளாக்குகள் 1 பிளாக்கில் 32 குடியிருப்புகள் | ரூ. 3,84,000 | ரூ. 5760 | 19-9-78 முதல் 26-9-78 வரை | 27-9-78 |
| (b) | பாட்ச் II 2பிளாக்குகள் 1 பிளாக்கில் 32 குடியிருப்புகள் | ரூ. 3,84,000 | ரூ. 5760 | | |
| 2. | அசோக்நகர் R 3 போலீஸ்ஸ்டேஷன் பின்புறம்நகராட்சி 115-வது வட்டம் | | | | |
| (a) | பாட்ச் I ஒரு பிளாக் ஒருபிளாக்கில் 48 குடியிருப்புகள் | ரூ. 2,88,000 | ரூ. 4320 | 21-9-78 முதல் 28-9-78 வரை | 29-9-78 |
| (b) | பாட்ச் II ஒருபிளாக் ஒரு பிளாக்கில் 32 குடியிருப்புகள் | ரூ. 1,92,000 | ரூ. 2880 | | |

மேற்பார்வை பொறியாளரின் டெண்டர் ஷெட்யூல்கள், நேர்முக உதவியாளர், தெற்குசர்க்கிள், குடிசை மாற்று வாரியம், நந்தனம்- சென்னை 35, அவர்களிடமிருந்து ரூ. 25- விற்பனைவரி மற்றும் சர்சார்ஜ் செலுத்தியதற்கான தனித்தனியே சலானைக் கொடுத்து, எல்லா அலுவலக நாட்களிலும், காலை 11 மணி முதல் மாலை 3-00 மணி வரை குறிப்பிடப்பட்ட அந்தந்த தேதிகளில் பெற்றுக் கொள்ளலாம்.

மேற்பார்வை பொறியாளர் (S)

தெற்கு சர்க்கிள்

குடிசை மாற்று வாரியம்

சென்னை-35

21-8-78

DIPR- 40801-78-21

### காவிரிபிரச்னை: கேரள கர்னாடகமுதல்வர்களுக்கு

# புரட்சித்தலைவர் அவசர கடிதம்

சென்னை, ஆக. 30- காவிரி நீர்ப் பிரச்சினை பற்றி அனைத்துக்கட்சித் தலைவர்களின் கருத்தையும் அரசின் கொள்கைகளை ஆதரித்து அனைத்துக் கட்சி தலைவர்கள் தெரிவித்த கருத்துக்களையும் ஒருமைப்படுத்தி கேரள-கருநாடக மாநில முதல்வர்களுக்கு கடிதங்கள் அனுப்பப் படுகின்றன என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

நேற்று காவிரிநீர் பிரச்சினை குறித்து அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவர் கூட்டியது தெரிந்ததே. கூட்டம் முடிந்ததும் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:-

''காவிரிநதிநீர்ப்பிரச்னை பற்றி தமிழக அரசு இதுவரையில் எடுத்துக்கொண்டிருக்கிற நடவடிக்கைகள், நடைமுறைகள் கொள்கைகள் இவைகளைப் பற்றியும் சென்ற முறை டெல்லியில் நடைபெற்ற 3 மாநில முதல்வர்கள் பொறியியல் வல்லுனர்கள் கூட்டத்தில் நடந்தவைகளையும் இன்றையகூட்டத்தில் கலந்து கொண்ட அனைத்துக்கட்சிதலைவருக்கு எடுத்துக் கூறப்பட்டன.

தமிழ்நாட்டுக்கு காவிரி நீர்மட்டுமின்றி கேரளாத்திலிருந்து தமிழ்நாட்டுக்குத் தரப்பட வேண்டும் என எதிர் பார்க்கும் நதி நீர் போன்றவைகளிலும் நாங்கள் கொண்டிருக்கிற கருத்துக்களை முழுமனதோடு ஆதரித்தும், மேலும் சிறந்த யோசனைகளையும் இன்றைய கூட்டத்தில் கலந்து கொண்ட அனைத்துக் கட்சிப் பிரதிநிதிகள் தெரிவித்தனர். முன்னாள் பொறியியல் நிபுணர்களும் முன்னாள் பொறியியல் வல்லுனர்களும் புள்ளி விவரங்களோடு அனைத்துக் கட்சித் தலைவர்களுக்கும் விளக்கிக் கூறினார்கள்.

அடுத்த (செப்டம்பர்) மாதம் 3-ந் தேதியன்று மீண்டும் டெல்லியில் நடைபெறவிருக்கும் இந்தப் பிரச்சினையில் சம்பந்தப்பட்ட மாநில முதல்வர்கள் கூட்டத்தில் கலந்து கொண்ட பிறகு என்ன முடிவு செய்கிறோமோ அதையும் இதே போல அனைத்துக் கட்சித் தலைவர்களையும் அழைத்துக் கூற இருக்கிறோம். முடிவுகள் ஏற்படாவிட்டாலும் அதையும் அவர்களிடம் எடுத்துக் கூறுவோம்.

### டெல்லியில் கூட்டம்

அனைத்துக்கட்சித்தலைவர்களின் கருத்துக்களையும் அரசின் கொள்கைகளையும் ஆதரித்து அனைத்துக் கட்சித்தலைவர்கள் தெரிவித்த கருத்துக்களையும் ஒருமைப்படுத்தி சம்பந்தப்பட்ட மாநில முதல்வர்களுக்கு கடிதங்கள் அனுப்பப்படுகின்றன.

அதை அவர்கள் பரிசீலித்து செப்டம்பர் மூன்றுந்தேதியன்றுடெல்லியில் கூட்டுகின்ற கூட்டத்தில் அவர்களின் கருததுக்கள் என்ன என்பதை வெளியிடுவார்கள் என எதிர்பார்க்கிறேன். அதுவரையில் அக்கடித விவரத்தை நாங்கள் வெளியிடக் கூடாது என்பதை அனைவரும் ஏற்றுக் கொள்வார்கள்.

இன்றைய கூட்டத்தில் கலந்துகொண்ட அனைத்துக் கட்சியினரும் ஒரு மனதாக அரசுக்கு இந்தப்பிரச்னையில் ஒத்துழைப்புத் தர முன் வந்திருப்பதை நான் மிகப்பெரிய வாய்ப்பு என எடுத்துக் கொள்வதோடு கூட்டத்தில் கலந்து கொண்டு கருத்து வழங்கிய அவர்களுக்கும் அவர்கள் சார்ந்துள்ள கட்சிகளுக்கும் தமிழக அரசின் சார்பில் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்''

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

அனைத்துக் கட்சி பிரதிநிதிகள்தெரிவித்தயோசனைகளில் ஒன்றிரண்டையாவது சொல்ல முடியுமா; எனநிருபர்கள்கேட்டதற்கு ''இப்போது அவற்றை வெளியிடுவது மாநில நலனுக்கு உகந்தது அல்ல'' என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

## ஜனதா முதல்வர் அபின் கடத்தினரா? மேலவையில்பரபரப்பு

புதுடெல்லி, ஆக 30— மத்தியப்பிரதேச முதல்வா வீரேந்திரகுமார் சக்லேச்சா சமீபத்தில் காட்மண்ட் சென்றபோது 37 லட்சம் ரூபாய் பெறுமான அபினை நேபாளத்துக்கு கடத்தினார் என்று மாநிலங்களவையில் பல எதிர்க்கட்சி உறுப்பினர்கள் புகார் கூறினார்கள்.

முதலில் காங்கிரஸ்உறுப்பினர் பிரகாஷ் மெஹ்ரோத்ரா இந்தப் புகாரை எழுப்பினார்:

கல்பனத்ராய் (காங்கிரஸ்) எம்.பி.சௌத்ரி(காங்கிரஸ்) கமல்ஜா (இந்திரா காங்கிரஸ்) ஆகியோர் ஆதரித்துப்பேசினார்கள்.

இதற்குப் பதிலளித்து சிவில் விமானப்போக்குவரத்து அமைச்சர் பி. எல் கவுசிக் கூறியதாவது:

கேள்வி ஞானத்தை வைத்துக்கொண்டு இப்படி கண்டபடி புகார் செய்ய வேண்டாம். நேரடியாக உறுப்பினர்களுக்குத் தெரிந்த புகாராக இருந்தால் பிரதமர் அவைகளை பரிசிலனை செய்யக்கூடும்.

சொந்தவேலையாகஜூன் 29ம்தேதி சக்லேச்சா, காட்மண்டுவுக்கு புறப்பட்டார். அடுத்தநாள் அதே விமானத்தில் திரும்பினார்.

சிவில் விமானப் போக்குவரத்து இயக்குநர்ஜெனரல் இந்த விமானப் பயணத்துக்கு அனுமதி தந்தார்.

டெல்லி விமான நிலையத்திலும்காட்மண்டிலும்சுங்க இலாகா அதிகாரிகள் விமானத்தை உரிய முறையில் சோதனை செய்திருக்கிறார்கள்.

இவ்வாறு மத்தியஅமைச்சர் கவுசிக் கூறினார்.

### ஷா கமிஷன் இறுதி அறிக்கை அரசு ஏற்பு

புதுடெல்லி, ஆக. 30- ஷா கமிஷனின் மூன்றாவது இறுதி அறிக்கையை மத்திய அமைச்சரவை ஏற்றது. அதன் முடிவுகள் மீது மேல் நடவடிக்கை எடுக்கவும் அமைச்சரவை தீர்மானித்தது.

### ஆளுநர் உரை

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

அறிக்கையை ஒட்டி தக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன நீதிக்கும் நியாயத்திற்கும் கட்டுப்பட்டுள்ள இந்த அரசு நிச்சயம் முறையான முடிவுகளை எடுக்கத் தவறாது.

#### வாழ்த்து

சில நாட்களே இந்தச் சட்டமன்றக்கூட்டம் நடைபெறவிருக்கின்றது. விவாதத்திற்கு முக்கியமான சட்டப்பணிகள் முன் வைக்கப்பட்டுள்ளன. தனக்கெனத் தனித் தன்மையையும், மரபையும், மங்காப் புகழையும் பெற்றிருக்கின்ற தமிழகச்சட்டமன்ற உறுப்பினர்கள், அவையின் நடவடிக்கைகளுக்கு ஒத்துழைப்பையும் ஆக்கப் பூர்வமான ஆலோசனைகளையும்வழங்குவார்கள் என நான் எதிர்பார்க்கின்றேன். நமது மாநில மக்கள் வளம் பெருகிமகிழ்வுடன் வாழ்வதற்காக நீங்கள் அனைவரும் மேற்கொள்ள விருக்கும் முயற்சிகள் வெற்றி பெற உங்களனைவருக்கும் எனது நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்

வணக்கம்

இவ்வாறு ஆளுனர் பட்வாரி பேசும்போது கூறினார்.

## ஆவடி கனரக ஊர்தி

## தொழிலாளர்கட்கு அறிவிப்பு

ஆவடி கனரக ஊர்தி அண்ணா தொழிற்சங்க நிர்வாக அமைப்பு சம்பந்தமாக முக்கிய ஆலோசனைக் கூட்டம் 3-9-78ந் தேதி ஞாயிறு காலை 10 மணிக்கு கழக தலைமை நிலையத்தில் (275, அவ்வை சண்முகம் சாலை) பேரவைத் தலைவர் பூ.ஆர். கிருஷ்ணன் எம்.பி. தலைமையில் நடைபெறுகிறது.

கனரக ஊர்தி தொழிற்சாலையில் பணிபுரியும் கழகத் தோழர்கள் தவறாது கலந்துக் கொள்ள வேண்டுகிறேன்.

வை. பெருமான்

பொதுச்செயலாளர்

அண்ணா தொழிற்சங்கப் பேரவை

## வடசென்னை மகளிர் பிரிவு தொழியர்களுக்கு

## அவசர அறிவிப்பு

நாளை 31-8-78 (வியாழக்கிழமை) மாலை 4 மணி அளவில் தலைமைக் கழகத்தில் நடைபெறுவதாக இருந்த வடசென்னை மகளிர் அமைப்புக் கூட்டம் தவிர்க்க முடியாத காரணங்களால் ஒத்தி வைக்கப்படுகிறது. மாற்றுத் தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

பி. டி. சரஸ்வதி

மகளிர் பிரிவுச் செயலாளர்

அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

சென்னை

30-8-1978

## கடற்படை அதிகாரியின் மகன்-மகள் கடத்தப்பட்டு படுகொலை

புதுடெல்லி, ஆக. 30. டெல்லியில் கடற்படை அதிகாரி ஒருவரின் மகனும் மகளும் கடத்தப்பட்டு படுகொலை செய்யப்பட்டனர். நாடாளுமன்றத்தில் இந்தப் படுகொலை பற்றி சரமாரி கேள்விகள் கேட்கப்பட்டன.

இந்த இருவரின் பிணங்களும் மேற்கு டெல்லியில் சாலை ஓரப் புதரில் கண்டுபிடிக்கப்பட்டன. ''குற்றவாளிகள் பற்றிய துப்பு கிடைத்துள்ளது.விரைவில் கண்டுபிடித்து விடுவோம்'' என்று போலீஸ் அதிகாரிகள் கூறினார்கள்.

### சஞ்சய் கீதா

டெல்லி ரேடியோ நிலையத்தில் ஒரு நிகழ்ச்சியை பதிவு செய்வதற்காக கீதாவும், சஞ்சயும் கடந்த சனிக்கிழமை மாலை சென்றார்கள். கீதா டெல்லியில் உள்ள ஒரு கல்லூரியில் பி. காம் பட்டப்படிப்பு இரண்டாம் ஆண்டு படித்து வந்தார்.

கீதாவுக்குத் துணையாக அவரது தம்பி சஞ்சய் உடன் போனான். சஞ்சய் பள்ளி மாணவன்.

வீட்டை விட்டுக் கிளம்பிய இருவரும் வானொலி நிலையத்துக்குப் போய்ச் சேரவில்லை. இதனால் கவலைப் பட்ட கடற்படை அதிகாரி கடந்த சனிக்கிழமை இரவே போலீசில் புகார் செய்தார்.

ஆனால் நேற்று காலை அதிர்ச்சியூட்டும் வகையில் அக்காள்- தம்பி இருவரின் பிணங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

கீதா, சஞ்சய் இருவரின் உடல்களிலும் ரத்தக் காயங்கள் காணப்படுகின்றன.

### அமைச்சர் உறுதிமொழி

நாடாளுமன்றத்தில் இந்தப் படுகொலை பற்றி வி. பி. சாத்தே (இ.காங்) கே. எல். குப்தா (ஜனதா) ஜோதிர்மாய்பாசு (இ.கம்) ஆகியோர் கேள்வி எழுப்பினார்கள்.

துணைச் சபாநாயகர் கோடேமுரகர் ''இந்தச் சம்பவம் அதிர்ச்சியூட்டுவதாகும் என்றார்.

அரசின் சார்பில் அமைச்சர் ரவீந்திரவர்மா அதிர்ச்சியையும் கவலையையும் தெரிவித்தார்.

''குற்றவாளிகளைப் பிடிக்க அரசு தன்னிடம் உள்ள எல்லா அதிகாரங்களையும் பயன்படுத்தும்'' என்றார் ரவீந்திரவர்மா.

மாநிலங்களவையிலும் உறுப்பினர்கள் கவலை தெரிவித்தனர்.

இந்தப் படுகொலை பம்பாயை சேர்ந்த பில்லா ஜஸ்பிர்சிங்கின் செயலாக இருக்கும் என போலீசார் சந்தேகப்படுகின்றனர்.

பில்லா போலீஸ் காவலில் இருந்து தப்பி ஓடியவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## கென்யாட்டா இறுதிச் சடங்கு: பிரதமர்மொரார்ஜிதேசாய்விரைகிறார்

புதுடெல்லி, ஆக. 30- தேசிய விடுதலைப் போராட்ட வரலாறுகளில் 'மாவ்-மாவ்' எனும் இயக்கத்தைநடத்திஉலகப் புகழ் பெற்ற மறைந்த கென்யா ஜனாதிபதி ஜோமோ கென்யாட்டாவின்இறுதிசடங்கில் கலந்து கொள்வதற்காக பிரதமர் மொரார்ஜிதேசாய் இன்று (புதன்கிழமை) நைரோபி செல்கிறார்,

மறைந்த கென்யாட்டாவின் இறுதிச் சடங்குகள் நாளை (வியாழன்) நைரோபியில் நடைபெறுகிறது: 34 சதுர அடிப்பரப்பில் கண்ணாடிச் சுவர்கள் எழுப்பட்டு தக்கதொரு நினைவுச் சின்னமாக அமையும் வண்ணம் கென்யாட்டாவின் புனித உடல் புதைக்கும் இடம் உருவாகி வருகிறது.

மறைந்த தங்களது மகத்தான தலைவரின் இறுதிச் சடங்கிற்கான வேலைகளை ஆயிரக்கணக்கானவர்கள் இருபத்தி நான்கு மணி நேரமும் பார்த்து வருகிறார்கள்.

கென்யாட்டாவின் இறுதிச்சடங்குகளை 18 மதத்தலைவர்கள், மரபு வழிமுத்தவர்கள் கிறித்துவர்கள் முஸ்லீம்கள் ஆகியோர் நடத்துகின்றனர்.

கென்யாட்டாவின்உடல் தற்போது நைரோபியில் உள்ள அவரது இல்லத்தில் பொதுமக்களின் பார்வைக்காக வைக்கப்பட்டுள்ளது. சாரிசாரியாக மக்கள் வந்து கண்ணீர் அஞ்சலி செலுத்திய வண்ணம் இருக்கிறார்கள்.

மறைந்த மாவீரன்கென்யாட்டாவின் புனித உடல் நாளை அரசு மரியாதையுடன் பீரங்கி வண்டியில் வைக்கப்பட்டு முக்கிய வீதிகளின் வழியே எடுத்துவரப்படும்.

பாராளுமன்றக்கட்டிடத்திற்கு அருகே இதாலிய சலவைக்கற்களாலும், கண்ணாடிச் சுவர்களாலும் உருவாக்கப்பட்டுள்ளபுதைகுழியில் அடக்கம் செய்யப்படும்.

கென்யாட்டாவின் இறுதிச் சடங்குகளுக்குப் பிறகு மொரார்ஜிதேசாய் செப்டம்பர் முதல் தேதி டெல்லி திரும்புகிறார்.

### திருமணம்

'அண்ணா' நாளிதழ் நிருபர் எம். சரவணமூர்த்தியின் சகோதரியும் எம். எஸ். ஆறுமுகத்தின் மகளுமான தனலட்சுமிக்கும் பாதுகாப்புத் துறையில் உள்ள கே. ராமநாதனுக்கும் இன்று (30-ந்தேதி) புதன்கிழமை காலை 9.30 மணிக்கு குன்னூர் ரோடில் உள்ள மாநகராட்சி சமூகக் கூடத்தில் திருமணம் நடைபெற்றது. உறவினர்களும் நண்பர்களும் திரளாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்திஅச்சகம், கச்சேரிசாலை, சென்னை-600004 ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

# அண்ணா

**சந்தா விவரம்**

1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி
"அண்ணா"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600014

**தேனில் மருந்தைக் குழைத்துக் கொடுப்பது போல் நகைச்சுவையோடு சீர்திருத்தக் கருத்துக்களையும் கலந்து தந்தவர் - கலைத்திறமும், கொடைத் திறமும் மிக்கவராக விளங்கியவர் கலைவாணர்!**

# கலைவானில் ஒரு முழு நிலவு

காலை நேரம்!

குழந்தைகள் பலர், கூட்டம் கூட்டமாகச் சாலையில் சென்று கொண்டிருக்கின்றனர். ஐந்து வயது முதல் 12 வயது வரை உள்ள சிறுவர்-சிறுமியர், வியர்க்க விறுவிறுக்க, ஓட்டமும் நடையுமாக ஒரு கையில் கனத்த பையையும், இன்னொரு கையில் உணவுப் பொட்டலத்தையும் தூக்கிக் கொண்டு சென்ற வண்ணம் உள்ளனர்!

அப்பொழுது-

படகு போன்ற கார் ஒன்று குழந்தைகளின் அருகில் வந்து நிற்கிறது! காரின் கதவைத் திறந்து கொண்டு, ஒருவர் இறங்குகிறார்! கருணை பொங்கும் விழிகளுடன்-எளிய தோற்றத்துடன் காணப்படும் அவர், குழந்தைகளைப் பரிவுடன் அழைக்கிறார்! எல்லோரும் ஆவலோடு அவர் அருகில் வந்து கூடுகின்றனர்.

"எல்லோரும் கூட்டமா எங்கே போறீங்க?"

"பள்ளிக்கூடத்துக்குப்போறோம்" குழந்தைகள் ஒரே குரலில் பதில் கூறுகின்றன!

"உங்கள் பள்ளிக்கூடம் இங்கிருந்து எவ்வளவு தூரம் இருக்கும்?"

"ஏழு மைல்..."

"அவ்வளவு தூரம் நடந்து போயியா படிக்கிறீங்க? ஏன்... உங்க ஊரிலேயே பள்ளிக்கூடம் இல்லியா?"

"இல்லீங்க"

அதற்கு மேலும் குழந்தைகளிடம் கேள்விகளை அடுக்கி அவர்களை நிறுத்திவைக்க அவர் விரும்பவில்லை.

'சின்னஞ்சிறு வயதில் அந்தச் சிறுவர் சிறுமியர் ஏழு மைல்கள் நடந்து செல்ல வேண்டியுள்ளதே-பள்ளிக்கூடத்திற்கு' என்று அவர்களுக்காக அவர் இரக்கப்படுகிறார்!

காரில் இருந்த பழங்களை எடுத்து குழந்தைகளிடம் அன்போடு கொடுக்கிறார். அவர்களைத் தட்டிக்கொடுத்து வழியனுப்பி விட்டுக் காரில் ஏறிச் செல்கிறார்!

இந்தச் சம்பவம் நடந்து முடிந்த இரண்டே மாதங்களில், அந்த ஊருக்கு அருகிலுள்ள நகரத்தில், கலைநிகழ்ச்சி ஒன்று ஏற்பாடு செய்யப்படுகிறது! அதன் மூலம் நிதி திரட்டப்பட்டு பள்ளிக்கூடம் ஒன்று கட்டப்படுகிறது. ஏழு மைல்கள் நடந்து சென்று படித்த அச் சிறுவர்கள், தங்கள் ஊரிலேயே படிக்கின்றனர்!

இந்த நிகழ்ச்சி நடந்து 24 ஆண்டுகள் ஆகின்றன; காரில் வந்து குழந்தைகளைக் கொஞ்சி, பழங்களை வழங்கி, அவர்கள் படும் துன்பத்தை அறிந்து கலை நிகழ்ச்சி நடத்தி, பள்ளிக்கூடம் கட்ட ஏற்பாடு செய்த அந்தக் கருணை உள்ளம் கொண்ட மாமனிதர் யார் தெரிகிறதா?

கலைவாணர் தான்!

திருத்துறைப்பூண்டி அருகில் ஏதோ ஒரு நிகழ்ச்சிக்குக் கலைவாணர் சென்றுவிட்டுத் திரும்பும்போதுதான், இந்தச் சம்பவம் நடந்தது!

கலைஞர்கள் தங்களைத் தனிமைப் படுத்திக்கொண்டு-யாரைப்பற்றியும் கவலைப்படாமல், தங்கள் செல்வமும், செல்வாக்கும், பெருக வேண்டும் என்பதைமட்டுமே நோக்கமாகக் கொண்டு வாழ்ந்த காலம் அது! ஏன் இப்போதும் அத்தகைய நடிகர்கள் இல்லாமல் இல்லையே!

அத்தகைய நடிகர்கள் மத்தியில், 'மக்களில் ஒருவர்தான் நாம், மக்களால் தான் நமக்கு இந்த வாழ்வு வந்தது. அவர்கள் வாழ்வுக்கு உதவ வேண்டியது நமது கடமை' என்று கருதக்கூடிய பண்பு உள்ளம் கொண்டவராக கலைவாணர் விளங்கினார்.

மக்களோடு இரண்டறக் கலந்தார். சினிமாவினால் அவர்களைசிரிக்கவைத்ததுடன் மட்டுமின்றி, சொந்த வாழ்க்கையிலும் அவர்கள் பயன்பெற எவ்வளவோ நல்ல காரியங்களைச் செய்தார்.

தமிழ்நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் அவரால் பயன்பெற்றவர்கள்பலர் இருப்பார்கள். எத்தனையோ கல்விக்கூடங்கள் அவரால் கலை நிகழ்ச்சி அல்லது வில்லுப்பாட்டு நடத்தப்பட்டு நிதி திரட்டிக் கட்டப்பட்டவைகளாகும்.

கலைவாணர் என். எஸ். கே. பேரறிஞர் அண்ணாவிடமும் அவரது அருமைத் தம்பிமார்களிடமும் இயக்கத்திலும் எத்தகைய பற்று கொண்டு இருந்தார் என்பது நாடறிந்த ஒன்று ஆகும்.

பேரறிஞர் அண்ணா கலந்து கொள்ளுகின்ற மாநாடுகளிலெல்லாம் கலைவாணர் என். எஸ். கே.யின் வில்லுப்பாட்டு நிகழ்ச்சி கட்டாயம் இருக்கும்! அண்ணாவின் கழகத்திற்கு ஆதரவாக தேர்தல் பிரச்சாரம் செய்து மக்கள் ஆதரவைத் திரட்டித் தந்தவர் கலைவாணர்!

காஞ்சிபுரத்தில் பேரறிஞர் அண்ணாக்கு ஆதரவாக கலைவாணர் கலைநிகழ்ச்சி நடத்தியபோது பேசிய பேச்சு, இப்போதும் காதுகளில் ஒலிப்பதுபோல் இருக்கின்றது.

திருச்சியில் மாநில மாநாடு கூட்டி இயக்கம் தேர்தலில் ஈடுபடுவதா வேண்டாமா என்பதற்கு ஒரு வாக்கெடுப்பு நடத்தி, அதில் பெருவாரியான மக்கள் தேர்தல் களத்திற்குச் செல்லும்படி பணித்ததன் காரணமாக 1957ல் அண்ணாவின் கழகம் தேர்தலில் போட்டியிட்டது.

காஞ்சிபுரத்தில் பேரறிஞர் அண்ணாவை எதிர்த்து காங்கிரசுக் கட்சியின் சார்பில் போட்டியிட்டவர் பெயர் டாக்டர் சீனிவாசன்.

பேரறிஞர் அண்ணாவிற்கு ஆதரவாக கலைநிகழ்ச்சி நடத்திய கலைவாணர் அவர்கள் காஞ்சீபுரத்தில் பேசும்போது...

"டாக்டர் சீனிவாசன் காங்கிரசு சார்பில் தேர்தலில் போட்டியிடுகிறார். அவர் மிகச் சிறந்த மருத்துவ நிபுணர் - உங்கள் நோய்களை விரட்டும் திறமை மிக்கவர். அவரை வெற்றிபெறச் செய்து, நீங்கள் சட்டமன்றத்திற்கு அனுப்பிவிட்டால் நல்ல டாக்டர் ஒருவரை காஞ்சீபுரம் இழந்துவிடும். அத்தகைய ஒரு டாக்டர் இங்கு இல்லாவிட்டால் எவ்வளவு கஷ்டம் உங்களுக்கு ஏற்படும் என்பதை நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள்.

நல்ல டாக்டரான அவரை நீங்கள் உங்களுடனேயே வைத்துக்கொள்ள வேண்டும். ஊரைவிட்டே அனுப்பக்கூடாது.

அவரை எதிர்த்து கழகத்தின் சார்பில் போட்டியிடும் அறிஞர் அண்ணா அவர்கள் காஞ்சீபுரத்தில் இருக்கும் நாட்களை விடத் தமிழகம் முழுதும் சுற்றிவரும் நாட்கள் அதிகம். ஆகையால் அவர் இந்த ஊரில் இல்லாமல் போவதால் உங்களுக்கு எந்தவிதமான குறையும் இல்லை.

நாட்டுக்காக, மக்களுக்காக பாடுபடும் அரசியல் தலைவரான அறிஞர் அண்ணாவை சட்டசபைக்கு அனுப்பினால்தான் உங்கள் ஊருக்கும், தமிழ்நாட்டுக்கும் நல்லது. ஒரு நல்ல மருத்துவ நிபுணரான டாக்டர் சீனிவாசனை, காஞ்சீபுரத்திலேயே இருந்து உங்களை நல்ல உடல்நலத்துடன் கவனித்துக் கொள்ள வேண்டியவரை அனுப்புவதால் உங்களுக்குத்தான் நஷ்டம்-கஷ்டம்"

என்று குறிப்பிட்டபோது எழுந்த கையொலி கோடை இடியொலியையும் மிஞ்சும் வகையில் இருந்தது!

"டாக்டர் சீனிவாசனுக்கு வாக்களிக்காதீர்கள், அண்ணாவுக்கே ஓட்டளியுங்கள்" என்று எவ்வளவு நாசூக்காக பிரச்சாரம் செய்தார்!

அவரது சொற்களில் கண்ணியமும், நகைச்சுவையும் மிகுந்திருப்பதைக் காணலாம்!

கலைவாணர் கடையாகக் கலந்து கொண்ட நிகழ்ச்சி அண்ணா படத் திறப்பு விழா. பேரறிஞர் அண்ணா 14-1-1969ல் கடைசியாக கலந்து கொண்டது சென்னை வாணி மகால் அருகில் நகைச்சுவை மாமன்னன் கலைவாணர் சிலையை திறந்து வைத்த நிகழ்ச்சி! பேரறிஞர் அண்ணாவும், கலைவாணரும் உள்ளத்தால் எந்த அளவு ஒன்றியிருந்தார்கள், ஒருவர் மீது மற்றவர் எத்தகைய மதிப்பு வைத்திருந்தார்கள் என்பதற்கு இருவரது கடைசி நிகழ்ச்சிகளுமே சான்றாக உள்ளன.

கலைவாணரின் நகைச்சுவை கருத்தாழத்துடன் இருக்கும். பண்பைக்குலைக்கும் வகையிலோ, கேட்பவர் இதயத்தைப் புண்படுத்தும் முறையிலோ இருக்காது.

வார்த்தைகளை நீட்டி முழக்குவது. ஏற்ற இறக்கத்தோடு இழுத்து இழுத்துப் பேசுவது. இல்லையேல் உடம்பை நெளித்து அஷ்டகோணலாக வைத்துக் கொள்வது. ஆர்ப்பாட்டம் செய்வது, விரசமாக வார்த்தைகளை வீசுவது, தெரிந்தும் வேண்டுமென்றே மற்றவர்களைப் புண்படுத்துவது- இவைதான் ஒரு சிலருக்கு நகைச்சுவையை வழங்க கை கொடுத்து உதவுகின்றன.

கலைவாணர் தனிப்பெரும் சிறப்போடு இருந்ததற்கு அவரது நகைச்சுவை வழங்கும் தனித்தன்மையே காரணம்!

தேனில் மருந்தைக் குழைத்துக் கொடுப்பதை போல் நகைச்சுவையோடு நல்ல பல கருத்துக்களைக் கலந்து தந்த கலைச்சித்தர் கலைவாணர் என். எஸ். கே!

அதற்கு உதாரணமாகப் பல படங்களில் இடம் பெற்றுள்ள பல்வேறு காட்சிகளைக் கூறலாம்!

'நாவில் சரஸ்வதி இருக்கிறாள்' என்று ஒருவன் கூறுவான்.

அதற்குக் கலைவாணர் பாடலிலேயே..

"மறையவன் நாவிலவள் உறைவது நிசமானால்
மலசலம் கழிப்பது எங்கே? எங்கே?",
என்று கேட்பார்.

தாழ்த்தப்பட்ட சகோதரன் ஒருவன் சாப்பிட்ட பாத்திரத்தை தண்ணீர் தெளித்து, கலைவாணரின் துணைவியார் டி. ஏ. மதுரம் எடுத்துச் செல்வார்.

அதே தாழ்த்தப்பட்ட சகோதரன் ரூபாய் நோட்டுக்களைக்கொண்டு வந்து தருவான், அதைமட்டும் கலைவாணரின் துணைவியார் அப்படியே பெற்றுக்கொள்வார்.

## நாகை தருமன்

"இதை மட்டும் தண்ணீர் தெளிக்காமல் ஏன் வாங்குகிறாய்?" என்பார் கலைவாணர்.

"தண்ணீர் தெளித்தால் நோட்டு கெட்டுவிடும்" என்று அவரது துணைவியார் பதில் கூறுவார்.

"உங்கள் சவுகரியத்திற்காகத்தான் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்பதெல்லாம். பணத்திற்கு மட்டும் தீட்டு இல்லை... பாத்திரத்தில் வந்து ஒட்டிக்கொள்கிறது. தண்ணீர் தெளித்து வாங்குகிறீர்களா? என்பார்" கலைவாணர்.

சரியான சாட்டையடி தான்! ஆனால், அடி வாங்குகின்றவர்கள் கூட இன்னொரு அடி விழாதா என்று எதிர்பார்க்கும் வகையில் வார்த்தைகளில், நடிப்பில் லாவகம் இருக்கும் கலைவாணரிடம்!

"தாலியை ஏன் கழுத்தில் கட்ட வேண்டும்?" என்று கலைவாணர் ஒரு படத்தில் தனது துணைவியாரைப் பார்த்துக் கேட்பார்.

அதற்குப் பதில் கூற இயலாமல் அவரது துணைவியார் விழிப்பார்.

"தாலியை விரலில் சுற்றலாம்-கையில், காலில், எங்கு வேண்டுமானாலும் கட்டலாம் அப்படிக்கட்டாமல் கழுத்தில் கட்டியதற்கு முக்கியமான காரணம் இருக்கிறது. கையையோ, காலையோ வெட்டினால் உயிர்போகாது பிழைத்துக் கொள்ளலாம்! ஆனால் கழுத்தை வெட்டினால் பிழைக்கவே முடியாது. உயிருக்கு நிகராகத் தாலியையும் அதைக் கட்டிய கணவனையும் நினைக்க வேண்டும் என்பதால் தான் கழுத்தில் அணிவிக்கிறோம். கழுத்திற்கு மேலே தலையில் தான் ஐம்பொறிகள் உள்ளன. கழுத்துக்குக் கீழே இதயம் இருக்கிறது. இரண்டிற்கும் நடுவில் தாலியை அணிவதும், தாலி நெஞ்சைத் தொட்டப்படி இருப்பதும், கணவனை இதயத்தில் வைத்துப் போற்றவேண்டும் என்பதற்குத்தான்" என்று கலைவாணர் விளக்கம் சொல்வார்.

இப்படிப் படங்கள் மூலம் எத்தனையோ அரிய கருத்துக்களை வாரி வழங்கிய வள்ளல் கலைவாணர்!

"நல்ல தம்பி" படத்தில் மதுவிலக்குக் கொள்கையை வலியுறுத்தி அவர் நடத்திய ஓரங்க நாடகத்தை மறக்கத்தான் முடியுமா?

குடிகெடுக்கும் குடியைப் பற்றி இந்திரலோகம் சென்று பிரச்சாரம் செய்யும் கலைவாணர் கடைசியில்...

"குடித்துப் பழகணும்..." என்று பாட...

"என்ன இது..." என்று அவரது துணைவியார் கேட்க...

பாலைக்குடிக்கப் பழகணும்" என்று கூறுவதும்!

"பாலு... குடிக்க... இல்லேன்னா...
"மோரைக் குடிச்சுக்கோ"
"அதுவும் இல்லேயின்னா"

"நீராகாரம் இருக்கவே இருக்கு... குடிச்சுப் பழகணும். காலையில் பல் தேய்த்தவுடன் கண்டிப்பாக நீராகாரம் குடிச்சுப் பழகணும்" என்று அவர் முடிப்பதும் எத்தனை அருமையாக இருக்கும்!.

இதைவிட சிறப்பான, கருத்துள்ள நகைச்சுவை மிக்க வேறு ஒரு ஓரங்க நாடகம் மதுவிலக்குக் கொள்கையை வலியுறுத்தி இதுவரை வந்ததில்லை என்று கூறலாம்!

'மனுதனாகிப் போனேன்-இப்ப நான்
மனுதனாகிப் போனேன்'

என்று அவர் பாடிய பாடல் பலரை மனிதர்களாக்க உதவியதே!

மதுரை வீரனில் ஒரு காட்சியில் பழயதை கலயத்தில் போட்டு சாப்பிட்டுவிட்டு "இந்தப் பழயதை கலயத்தில் போட்டு சாப்பிட்டு விட்டு, அதில் உள்ள நீராகாரத்தை கடைசியிலே குடிக்கும்போது எப்படி இருக்கு தெரியுமா? இதைத்தான் எல்லாரும் தேவாமிர்தமுன்னுசொல்லுராங்களா?" என்று அவர் அப்பாவியைப் போல் கூறும் உரையாடல் எத்தனை கருத்துள்ளது?

சிந்தித்தால் எத்தனை... எத்தனை கருத்துக்கள் கிடைக்கும்!

ஏழ்மையில் உள்ளவன் கிடைப்பதையும் இருப்பதையும் தேவாமிர்தம் என்று எண்ணுகிறான்! ஆனால்... சிலர் எல்லாவற்றையும் தனக்கே உரிமையாக்கிக் கொள்ள எத்தனை பாடுபடுகிறார்கள் என்பதை அவர் சொல்லாமல் சொல்லுகிறார் என்பது புரியவில்லையா?

நாட்டு மக்களுக்கு நல்லபல கருத்துரைகளை திரைப்படங்களின்மூலம் பாடங்களாக கற்பித்தவர் கலைவாணர்!

கர்ணனைப்பற்றி ஒரு கதை உண்டு! கர்ணன் தங்கக் கிண்ணத்தில் எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தபோது ஒருவர்வந்து தருமம் கேட்டாராம்! உடனே அருகில் இருந்த தங்கக் கிண்ணத்தை எடுத்துக் கொடுத்து அனுப்பினானாம்!

'உள்ளே சென்று ஏதாவது எடுத்து வந்து கொடுத்திருக்கலாமே' என்று அருகில் இருந்த ஒருவர் கேட்டாராம்,

'நான் உள்ளே சென்று வருவதற்குள் என் மனம் மாறுவதற்குக்கூட இடம்தரக் கூடாது. ஏதாவது கொடுத்தனுப்பும் எண்ணம் வந்துவிடக்கூடாது என்று தான் இருப்பதை உடனேகொடுத்தனுப்பினேன்" என்று கர்ணன் கூறினானாம்.

கலைவாணர் மருத்துவமனையில் உடல் நலம் பாதிக்கப்பட்டு படுத்திருக்கின்றார். நண்பர் ஒருவர் தனது இல்லத்தில் திருமணம் நடக்க இருப்பதாக அங்கு வந்து தெரிவிக்கிறார். அவருடைய குடும்பநிலை நன்கு புரிந்த கலைவாணர் ஏதாவது உதவி செய்யவேண்டுமென்று நினைக்கின்றார். கையிலோ பணம் இல்லை. அவரது கண்கள் சுற்றிலும் சுழல்கின்றன.

அருகில் வெள்ளி கூஜா ஒன்று இருப்பதைக் கண்டதும்-அவரது அகமும், முகமும் மலர்கிறது!

மெல்ல தள்ளாடியபடி எழுந்து, வெள்ளி கூஜாவை எடுத்து நண்பரிடம் தனது பரிசாக வைத்துக்கொள்ளும்படி கொடுக்கிறார்!

கர்ணனின் கொடைத்தன்மையையும் கலைவாணர் உள்ளம் விஞ்சி நிற்கிறது.

இதுபோல் பல நிகழ்ச்சிகளை அறிகின்றபோது கலைவாணர் கலைத்திறம் மட்டுமல்ல கொடைத் திறமும் தெரிகிறது!

அந்தக் கலைமேதையை, வரையாது கொடுத்த வள்ளலை காலம் நம்மிடமிருந்து பிரித்துவிட்டது!

அவர் ஊட்டிய உணர்வுகள்...கலைவாணரின் கொடை உள்ளம்...நல்ல பண்புகள் அத்தனையும் அப்படியே குடி கொண்ட அவருடைய அன்புத்தம்பி நமக்கு தலைவராக இருக்கின்றார்.

அரசியலில் பேரறிஞர் அண்ணாவையும், கலையில் கலைவாணரையும் தனது வழிகாட்டிகளாகக் கருதும் புரட்சித் தலைவர் நமக்குத் தலைவராகக் கிடைத்திருப்பது — நாம் பெற்ற பெரும் பேறு!

அண்ணாவின் 'இதயக்கனி' ஆட்சி பீடத்தில் அமர்ந்து, அரசு சார்பில் தனது கலையுலக அண்ணன் கலைவாணருக்கு கலைவாணர் அரங்கில் முதன் முதலாக விழா எடுக்கின்றார்!

அரசியல் உலகும், கலையுலகும் மகிழ்ச்சியில் திளைப்பதை-மனமகிழ்ந்து புரட்சித் தலைவரை வாழ்த்துவதை சொல்லவும் வேண்டுமோ?

'வயசுப்பொண்ணு' படத்தில் முத்துராமன்

## முத்துராமன் பதில்கள்

கேள்வி: நீங்களும் தமிழக முதல்வரும் எத்தனை படங்களில் இணைந்து நடித்திருக்கிறீர்கள்?
-கே. ஆர். அன்பழகன், மா. புளியங்குடி

முத்து: 14 படங்களில் நடித்திருக்கிறேன்.

கேள்வி: புரட்சித் தலைவரைப் பற்றி தங்கள் கருத்து என்ன?
கே. ரத்தினவேலு, சிங்கம்புணரி

முத்து: நீங்களே சொல்லிவிட்டீர்களே...புரட்சித் தலைவர் என்று! புரட்சித் தலைவர் மட்டுமல்ல...மக்கள் திலகம், பொன்மனச் செம்மல்... அண்ணாவின் இதயக்கனி! தோன்றிற் புகழோடு தோன்றுக என்ற குறளின் வரிக்கு பொருள்- எங்கள் அண்ணன்!

கேள்வி; பதவி, பணம் புகழ் இவை எந்த வழியில் பெற்றால் அழியாது?
கே. பரமசிவம், மணச்சநல்லூர்

முத்து: பதவியும், பணமும் வரும்- போகும்... நிலையானது அல்ல! நாட்டுக்காகச் செய்யும் தன்னலமற்ற தியாகத்தால் வரும் புகழே அழியாதது.

கேள்வி: தாங்கள் சீசனுக்கு ஏற்றால் போல் ஊதியத்தை உயர்த்துவதால் தான் உங்களுக்கு அதிக படம் புக் ஆவதில்லை என்று கூறப்படுகிறதே? உண்மையா?
எம். ஜி. ஆர். மூர்த்தி, கள்ளக்குறிச்சி

முத்து: இப்போதும் நான் பல படங்களில் நடித்துக் கொண்டுதான் இருக்கின்றேன்- ஓய்வின்றி கடுமையாக உழைத்துவருகிறேன். நீங்கள் கேள்விப்பட்டது உண்மையாக இருந்தால் எனக்கு இவ்வளவு படங்கள் இருக்காது.

கேள்வி: அண்ணாவின் இதயக்கனி புரட்சித்தலைவர் அவர்களும் தாங்களும் நாட்டுக்கு ஏற்ற வகையில் நல்ல கருத்துள்ள படங்களில் ஒன்றாக நடிப்பீர்களா?
பி. காளிமுத்து, வேலூர்.

முத்து: நடித்திருக்கிறோம்! நடிப்போம்!

கேள்வி :- தாங்கள் அரசியலில் நுழையாமல் நடுநிலை வகிப்பதற்குத் தொழில் பாதிக்கும் என்ற பயம் காரணமா?
கே. எஸ். அப்துல் சலீம், கீழ்வேளூர்

முத்து :-தொழில் பாதிக்கும் என்ற பயம் இருந்தால் நான் எனது கருத்துக்களை பகிரங்கமாகச் சொல்ல மாட்டேனே!

கேள்வி :. புரட்சித் தலைவர் எப்போதாவது கோபம் அடைந்ததை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?
—டாக்டர் ஆனந்தபாபு, பொதட்டூர் பேட்டை

முத்து :- ஒருமுறை படப்பிடிப்பில் நாங்கள் கலந்துகொண்டிருந்தபோது தொழிலாளர்களை பட முதலாளி ஒருவர் சரிவரக் கவனிக்காததைக்கண்டு அவருக்குக் கோபம் வந்ததை நான் நேரில் கண்டிருக்கிறேன்! (வளரும்)